# கோ
# வி
# லை



# திறவுங்கள்!





ஆசிரியர்:

"நந்தபாலன்"

துறையூர்

தியாகக்கொடி பதிப்பகம்.

# கோவிலைத் திறவுங்கள்



ஆசிரியர்:

"நந்தபாலன்"



தியாகக்கொடி பதிப்பகம்,

துறையூர், :: :: திருச்சி ஜில்லா.

முதற் பதிப்பு 1946—டிசம்பர்
2-வது பதிப்பு 1947—ஜனவரி
3-வது பதிப்பு 1947—ஏப்ரல்

# பதிப்புரை.

வணக்கம்.

இளைஞர்களாகிய எங்கள் முதல் முயற்சியின் பயனாகப்பூத்தது "தியாகக்கொடி" என்ற கையெழுத்துப் பத்திரிகை. அதன் வரிவடிவிலே தோன்றியதுதான் இப்புது முயற்சி.

நாட்டின் இன்றைய நிலையை அனுசரித்து அடுத்தடுத்து பல புத்தகங்கள் வெளியிடுவதன் மூலம் தேசப்பணியையும், இலக்கியப்பணியையும் ஒருங்கே செய்ய எண்ணி முன் வந்துள்ளோம். தமிழன்பர்கள் எங்கள் முயற்சிக்கு அமோகமான ஆதரவை அளித்துள்ளார்கள். அந்த அபரிமிதமான ஆதரவினால்தான் இப்புத்தகம் மூன்றும் பதிப்பாக வெளியாகிறது.

அன்பர்கள் ஆதரவு மேலும் மேலும் வளரும் என்று எதிர்பார்க்கிறோம்.

—பதிப்பாளர்கள்
'தியாகக்கொடி'

விலை 0-8-0

# மதிப்புரை.

**வீரகேசரி** 12—1—47

"தீண்டாமை ஓர் சாபக்கேடு" என்றும் ஹரிஜனங்களுக்கு ஆலயங்களைத் திறந்துவிட வேண்டியது அவசியம் என்றும் நூல்கூறுகிறது. சமூக சீர்திருத்தத்திற்கு இந்நூல்கள் வரவேற்கத்தக்கவை.

x x x

**பிரசண்ட விகடன்** 15—2—47

கடவுளை வணங்குவதற்கு எவ்விதத்தடையும் இருக்கக்கூடாது என்று வலியுறுத்தி எழுதப்பட்டிருக்கிறது.

x x x

**சிவாஜி** 12—1—47

ஆலயப் பிரவேசம் நடைபெறுகின்றன. பொதுமக்களிடையே இந்த ஆக்கவேலைக்கு ஆதவு வளர்ந்து வருகிறது. இந்த சந்தர்ப்பத்தில் தீண்டாமைப்பேயை ஒடுக்க உதவும் இந்தப்புத்தகம் வெளிவந்திருப்பது பாராட்டத்தக்கது.

x x x

**K. S. முத்துவேலு** 20—12—46

அரிய விஷயங்களை விளக்கி (நல்) அறிவைப் புகட்டி ஆன்றோர் தெளிந்த உண்மைப் பொக்கிஷத்தை உலகமுய்யத் திறந்துவிட்டிருக்கிறார் இதன் ஆசிரியர்.

x x x

A. R. நாதன் 28—12—46

பாட்டாளிகள் வெந்துயர் கல்லைக் கரைக்கும் எனின் வைதிகர்கள் மனதை அவை எவ்வளவு தூரம் கவரும் என்பதைச் சொல்லவேண்டியதில்லை. அனுவசியமான வளர்த்தல்கள் இன்றி இப்புத்தகம் முதல் வெளியீடாக வந்திருப்பது பாராட்டத்தக்கது.

x x x

THE FREE PRESS 10—2—47

"Kovilaitiravungal" by Nandapalan. The Thiyaga kodi Publishers, Thuraiyur. Price: As. 8.

The author points out in a spirited fashion, how the curse of untouchability was something unheard of in the Puranic age. He cities Rama's partaking of Guha's hospitality and Yudhistra insisting on taking the dog into heaven. The impact of the Western civilisation has made the socalled orthodox sometimes hopelessly inconsisent, inasmuch as they do not have any objection to an European entering the temple at all. He pleads vehemently for the abolition of this evil which has made such anti-Indians as Miss Mayo and Smuts point a significant finger of scorn at our policy of segregation based on religion.

x x x

சக்தி 14—1—47

தீண்டாமையின் தீமை. ஆலயங்கள் அமைந்தகதை பாட்டாளிகளின் துயரம். போலிச் சமயவாதிகளின் சண்டிப்போக்கு-நொண்டிக் காரணம். ஆலயங்களின் சீரிழிவு. காந்திஜீயின் தொண்டு. கோவில்களைத் திறக்கவேண்டியதின் அவசியம். இவைகளை ஆசிரியர் மிக்க உணர்ச்சியோடு தெளிவாக ஆதாரம் காட்டி எழுதியிருக்கிறார்.

# 1. தீண்டாமை

**— ஒரு சாபக்கேடு.**

**1942-ம்** ஆண்டு நவம்பர் மாதம் 13-ம் நாள் நடைபெற்ற ஐக்கிய நாடுகளின் கூட்டத்தில் "இந்தியாவிலே ஜாதியிலே உயர்வு-தாழ்வு, வகுப்புவாதம் எல்லாம் இருக்கிறது" என்று பாய்ந்தார் ஜெனரல் ஸ்மட்ஸ் என்ற "சுதந்திர விரோதி"

அநேக ஆண்டுகளுக்கு முன்னால் இந்தியாவைச் சுற்றிப்பார்க்க வந்த அமெரிக்க கன்னிகையான 'குப்பைக்காரி' மிஸ் மேயோ "இந்திய மாதா" என்ற அதிகப் பிரசங்கித்தனமான புத்தகம் ஒன்றை எழுதினாள். அது ஒரு அபத்த பஞ்சாங்கம். அதில், "இந்தியர்கள் காட்டுமிராண்டிகள், நாகரீகமற்றவர்கள்" என்றெல்லாம் எழுதினாள். அதற்கு எடுத்துக் காட்டாக இதைத்தான் எடுத்துக்காட்டினாள்.

> "இந்தியாவிலே 8 கோடி ஜனங்களை தீண்டாதவர்களாக ஒதுக்கிவைத்து அவர்களைப்பன்றியிலும் நாயிலும் கேவலமாக இந்தியர்கள் நடத்துகிறார்கள்" என்று எழுதியிருந்தாள்.

ஆம். உண்மை. உண்மையை உண்மை என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

பரந்த பரதகண்டம் இந்தியா. கனியும் கிழங்கும் பொன்னும், வெள்ளியும் நித்த நித்தம் கனிந்து தரும் நாடு இந்தியா. அகண்ட காவேரியும், அழகிய கங்கை நதியும் வளைந்து வளைந்து சுழிந்து ஓடி வைய முழுவதையும் செழிக்கச்செய்யும் நாடு இந்தியா. எவருமே முடிகண்டறியாத மூதல்மலைத்தொடராகிய இமாசலத்தையுடையது இந்தியா. அந்நாளில் அயலார் பொன்காசுகள் குலுங்கிக் குலுங்கி பூத்துக் காய்க்கும் மரங்கள்நிறைந்தது இந்தியா எனஎண்ணி இந்நாட்டை நோக்கி ஓடிவந்தனர். அன்னை பாரத தேவி அத்தகைய மாக்ஷி பெற்றிருந்தாள் இந்நிலவுலகில். இத்தகைய இனிய நாட்டிலே பிறந்துள்ள நாம் நாற்பது கோடி மக்கள். இந்த நாற்பது கோடியிலே எட்டுகோடி மக்களை நாம் அநாவசியமாக வெறுத்து ஒதுக்கித் தள்ளியிருக்கிறோம். அவர்களுக்கு "தீண்டாதார்கள்" என்ற பட்டத்தைச் சூட்டி சூழ்ச்சிசெய்து மூலையில் உட்காரவைத்துவிட்டோம். அவர்கள் உயர்ந்த ஜாதியினரைப்போல் உடுத்திக் கொள்ளக்கூடாது; உண்ணக் கூடாது; அலங்கரித்துக்கொள்ளக் கூடாது; ஆனந்தப்படக் கூடாது; உயர் ஜாதியினரெதிரில் அவர்கள் உட்கார்ந்திருக்க கூடாது. உயர்ஜாதியினரின் தெருவிலே அவர்கள் செருப்புக்காலுடன் பிரவேசிக்கக்கூடாது. எதிரே வரும் உயர்ஜாதியினரைக் கண்டு ஒருநூறு அடி தூரம் விலகிக்கொள்ள வேண்டும். வாழ்க்கையின் லட்சியங்களை, சுகங்களை, சுதந்தரங்களை, இன்பங்களை அவர்கள் அனுபவிக்கக்கூடாது. தவறிப் போய்கூட முழங்காலுக்குக்கீழே தொங்கும்படியவர்

கள் வேஷ்டிகட்டக்கூடாது. இப்படியெல்லாம் கட்டு திட்டங்கள் செய்தோம். அவர்களுடைய பெண்களுக்கும் இதே சட்டங்களைப் போட்டோம்.

இந்த உளுத்துப்போன வேதாந்தப் பிடிப்பு அநேக நூற்றாண்டுகளாக நம்மையழுத்தமாய் பிடித்துக்கொண்டு விட்டது. நமது இரத்தத்திலே—நமது சந்ததிகளின் இரத்தத்திலேகூட இது ஊறிப்போய் விட்டது. இதன் பயனாக, அவர்கள் மேல்ஜாதி ஹிந்துக்களுடன் சரிசமமாக நடக்கக்கூடாது அவர்கள் ஆலயத்தினுள் பிரவேசிக்கக்கூடாது என்றெல்லாம் கூப்பாடுபோடுகிறோம். இதிலே வைதீக கோஷ்டி இன்னும் கொஞ்சம் உயர்ந்த குரலிலே கூச்சல் போடுகிறது. "ஐயோ மதம்போச்சு, தர்மம் போச்சு, நியாயம் போச்சு, வேதமெல்லாம் போச்சு, ஓடிவாருங்கள்; காப்பாற்றுங்கள்; இந்து மதமே போய்விட்டது" என்று இப்படியெல்லாம் லபோ திபோ என்று அடித்துக்கொண்டு அலறுகிறார்கள். சைத்தான் கூட வேதத்திலிருந்து ஆதாரம் எடுத்துக்காட்டுமாம். அதுபோல், கரையான் பிடித்த வேதங்களிலிருந்து ஆதாரங்களைத் தேடிப்பிடிக்க துருவித்துருவிப் பார்க்கிறார்கள்.

எல்லாவற்றிலும் சாஸ்திரத்திற் கண்டபடியே தான் நடக்கிறோமா என்பதை அவர்கள் ஒரு நிமிஷம் யோசிக்க மறந்துபோகிறார்கள். "தண்ணீரைத் தாண்டக்கூடாது" என்று வேதம் சொல்லுகிறது. யார் கப்பலில் செல்லாமல் இருக்கிறார்கள்? குடுமி போச்சு, கிராப்பு வந்திருக்கிறது. பசும்பால் போய் முட்டையும் மாட்டுக் கொழுப்பும் கலந்த ஓவல்டின்.

காட்லீவர் ஆயில் முதலியவை வந்திருக்கின்றன. இதற்கெல்லாம் ஆக்ஷேபனை செய்யாதவர்கள் தீண்டாமை விஷயத்தில் மட்டும் நாம் மேற்கூறியவாறு ஒலிபரப்பும் கருவி இல்லாமலே உச்சஸ்தாயியில் ஓலமிடுகிறார்கள்.

தென்னாட்டில் சென்னை மாகாணத்தில் ஏராளமான கோவில்கள் உள்ளன. திருப்பதி, திருவரங்கம் ஸ்ரீ வில்லிப்புத்தூர், திருவல்லிக்கேணி முதலிய விஷ்ணு ஆலயங்களும், திருவானைக்கா. திருவண்ணமலை, சிதம்பரம், காஞ்சி, கும்பகோணம் முதலிய சிவஸ்தலங்களும் உள்ளன. இந்த க்ஷேத்திரங்களிலே நம் சகோதரர்கள் ஒருசாராருக்கு, நம்மில் ஒரு பகுதியாருக்கு நுழையக்கூட அனுமதியில்லை. கோவிலுக்குள் பிரவேசிக்க மனதால் நினைக்கும் போதே "இங்கே ஆதித்திராவிடர்கள் ........................................ முதலியோர் பிரவேசிக்கக்கூடாது. மீறுபவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள்" என்ற கோவிலின் எச்சரிக்கை போர்டு அவர்களை வெறித்துப்பார்க்கிறது. அதையும்மீறி அவர்கள் உள்ளே நுழைந்து விட்டால் கொலை விழுந்துவிடும்.

இந்தியாவின் பழங்குடி மக்களாகிய எட்டுகோடி மக்களுக்கு மனிதனுக்கு உள்ள ஒரு உரிமை இல்லையென்றால் அதுசகிக்கக்கூடியதா? போற்றத்தக்கது தானா? ஒரு நிமிஷம் சிந்திக்கவேண்டும்.



# 2. ஆலயங்கள்

## —அமைந்த கதை.

ஆதி மனிதன் அக்கினி, சந்திரன், சூரியன் முதலிய இயற்பொருளைக் கடவுள்என வணங்கிவந்தான். மனிதன் நாகரீகம் பெறப்பெற எங்கும் பரந்து வியாபித்திருக்கும் எல்லாங் கடந்த அச்சக்திக்கு மனித உருவங்கொடுத்தான்.

அக்கினியை அழிக்கும் கடவுளாக மாற்றினன். அதற்கு மனித உருவங்கொடுத்தான். அவன் ஆதியில் வணங்கி வந்த அந்த அக்னியின் சின்னம் துலங்க அதன் நெற்றியில் கொண்டுபோய் நெருப்பைவைத்தான். அவரை முக்கண் மூர்த்தியாக்கினன். 'பெயரை ருத்திரன்' என வைத்தான்.

மதியை மகாவிஷ்ணுவாக்கினன். அதன் குளிர்ச்சியை அவன் புதுப்பித்த அத்தெய்வத்தின் உதடுகளில் புன்னகையாகப் பதிப்பித்தான். நீல வானில் காக்ஷியளிக்கும் அதன் சூழ்நிறத்தையே அத்தெய்வத்துக்குக் கொடுத்து நீலமேக சியாமள வர்ணன் ஆக்கினன்.

இருளைப் போக்கி வெளிச்சத்தைக் கொடுத்து உயிர்கள் தோறும் பரவி உற்பத்தியையும் வளர்ச்சியையும் உண்டாக்கும் அந்த வஸ்துவாகிய சூரியனைப்

"பிர்மா" ஆக்கினன். அதற்கு நான்கு முகங்களை வைத்தான்.

அதோடு அவனுக்கு திருப்தி ஏற்படவில்லை. அவர்களுக்கு பெண்டாட்டியை உண்டாக்கினன். அதோடும் அவன் ஆசை முடியவில்லை அவர்களுக்குத் தலா ஒரு 'வைப்பாட்டி'யையும் ஏற்படுத்தினன்! அப்புறம் அவர்களுக்குப் பிள்ளையை உண்டாக்கினன். அப்பிள்ளைகள் பெற்ற தாயையே பெண்டாளக் கேட்டதாகவும், குறப்பெண்களிடமும், இடைப் பெண்களிடமும் காதல் நாடகம் நடத்துவதாகவும் வர்ணித்தான்.

அப்புறம் அக்கடவுள்களைக் காராக்கிரகத்தில் அடைப்பதுபோல் வீடுகட்டி உட்கார வைத்தான். நாளாக நாளாக அந்த வீடு கொஞ்சம் கொஞ்சமாக அகன்று உயர்ந்து வானத்தையளாவப் பெரிதாகிக் கொண்டே வந்தது. நாளடைவில் அவனல் அவ்வாறு கற்பனைசெய்து மகிழப்பட்ட கடவுள்களுடன் கூட, அவர்களுடைய புதல்வர்கள், புதல்விகள், பேரன்கள், பேத்திகள், பரிவாரங்கள் எல்லோரையும் அங்கே உட்காரவைத்தான். இப்படித்தான் ஆதியில் கோவில் உண்டாயிற்று.

நாகரீகம் முதிர முதிர இன்னும் கோவில்களும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துகொண்டுதான் போகின்றன. எண்ணெய் விளக்குகள் எரிந்த கோவில்களில் எலக்டிரிக் விளக்குகள் எரிகின்றன. மின்சார விசிறிகள் சுற்றுகின்றன. அம்மனின் பள்ளியறையை இரவு நேரத்தில் 'ஐயன்' நாள்தோறும் அலங்கரிப்பது தவறுவதில்லை

திருவிழாக் காலங்களில் பழைய காலத்தில் எரிந்த தீப்பந்தங்கள் போய் கியாஸ்லைட்டுகள் வந்திருக்கின்றன. மூர்த்திகளின் இரதத்தைச் சுற்றி எலக்டிரிக் பல்ப் ஜோடனை. சினிமா ஸ்டார்கள் மாதிரி 'அப்பனும்' 'அம்மனும்' அலங்கரிக்கப்படுகிறார்கள். இன்னும் சினிமா காக்ஷிகளில் காணும் இனியவை எல்லாவற்றையும் அந்த அலங்காரங்களில் புகுத்துகிறான் இன்றைய மனிதன்.

அப்புறம் சதிர்க்கச்சேரி, பொய்க்கால் குதிரை வேடிக்கை, சினிமா ஸ்டார்களின் புது மோஸ்தர் டான்ஸ், சங்கீதக் கச்சேரிகள், நாதஸ்வரம் இப்படியெல்லாம் கடவுள்வரை நாகரீகத்தையும், சிற்றின்பங்களையும் கொண்டுவந்து திணித்துவிட்டான் மனிதன். ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் அவனுடைய பிடி தளரவில்லை. மனிதருள் ஒரு பகுதியாரை, ஆறறிவு படைத்த மக்களை, உடன் பிறந்த சகோதரர்களை ஜன சமூகத்திற்கு இன்றியமையாத ஒரு பெரும் பகுதியினராகிய எட்டுகோடி மக்களை ஆலயத்தினுள் அனுமதிக்க உறுதியாக மறுக்கிறான். இது நியாயமா? தர்மமா? மனித உணர்ச்சிக்கு ஏற்றதா? கேட்கப்போனல் சாஸ்திரத்தில் இடமில்லை என்கிறான்.

எங்கும்பரந்து வியாபித்திருக்கும் அச்சர்வ வியாபியைச் சிறையில் அடைக்க சாஸ்திரம் சொல்லியிருக்கிறதா? கியாஸ்லைட் வெளிச்சம், மின்சார அலங்காரம் எல்லாம் கேட்கிறதா? சினிமா ஸ்டார்களின் நாட்டியத்தை நாடுகிறதா? இதற்கெல்லாம் சாஸ்

திரத்திலிருந்து ஆதாரம் காட்டாமல் அமுக்கிவிடுகிறான்.

சாஸ்திரம் என்பது என்ன? மனிதன் தனக்காக ஏற்படுத்திக்கொண்ட சில நியதிகள். எனவே நமக்காக சாஸ்திரமேயொழிய, சாஸ்திரத்திற்காக நாமல்ல,என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும். மனிதன் காய்கறி கந்தமூலங்களை தின்று இலைகளையும், மரப்பட்டைகளையும் உடுத்தித் திரிந்த அந்தக் காலத்துக்கும் இன்றைக்கும் ஈடுகட்ட முடியுமா? அந்தக் காலத்தில் மிகத் தவறாகக் கருதப்பட்ட விஷயம் இன்று போற்றக்கூடியதாயிருக்கலாம். அன்று "தீண்டாமை" இல்லை என்பதைச் சாஸ்திரம் கூறுகிறது. எனினும் இருந்ததாக வைத்துக்கொள்வோம். இன்று அதை மாற்றியாக வேண்டும். இன்றைய மனிதன் அணுக்குண்டு காலத்தில் வசிக்கிறான். நாகரீகம் மின்னல் வேகத்தில் வளர்ந்து உச்சநிலைக்கு வந்திருக்கிறது. இக்காலத்திலா தீண்டாமை?

---

ஹிந்து சாஸ்திரப்படி சர்வ வியாபியாக உள்ள கடவுள், எந்த ஹிந்துவும் தன்னைக் கோவில் உள்பட,எந்த இடத்திலும் பார்க்கக் கூடாதென கருதுவதாக நினைப்பதற்கில்லை. மனிதனுககு மனிதன் உள்ள வேற்றுமை கடவுளின் சிருஷ்டியல்ல; மனிதன் சிருஷ்டி. எனவே ஹரிஜனங்களுக்கு ஆலயப்பிரவேச அனுமதிமறுப்பு எக்காரணத்தைக் கொண்டும் நியாயமாக முடியாது.

—மந்திரி கோடி ரெட்டி

# 3. பாட்டாளிகளின்

— வெந்துயர்

பள்ளர், பறையர், சக்கிலியர், மறவர், குறவர் முதலிய இவர்களைத் தீண்டக்கூடாதாம். தீண்டினல் தீட்டு ஒட்டிக்கொள்ளுமாம். தீட்டு எப்படியிருக்கும் என்பது ஒரு கேள்வி. மனிதனுகப் பிறந்த அவர்களுடைய இரத்தமும் - நம்முடைய இரத்தமும் ஒன்ருகத்தானிருக்கின்றது. இருஜாதியினரின் இரத்தத்தையும் எடுத்துப் பரிசோதித்துப் பார்த்த டாக்டர்கள், உயர்ஜாதி—தாழ்ந்த ஜாதி இருவருடைய இரத்தமும் ஒரே மாதிரியாக இருப்பதாகவே கூறியிருக்கின்றனர். நமக்குள்ள உணர்ச்சிகள், அறிவு, ஆற்றல் அனைத்தும் அவர்களிடமும் அமைந்திருக்கின்றன. கடவுளின் ஆக்ஞையினல் சுழல்வதாக நாம் கருதுகிற சந்திரனும், சூரியனும் உயர்ஜாதி-தாழ்ந்த ஜாதி என்று பேதம் பாராட்டுவதில்லை. அப்படியிருக்க அவர்களை மட்டும் நாம் ஏன் "தீண்டாதார்" என ஒதுக்கி வைக்கவேண்டும்?

உண்மையில் நாம் தாழ்த்தப்பட்ட அந்த ஏழை மக்களுக்கு ஒரு பெரும்பிழை செய்துவிட்டோம். அப்பிழையை இன்னும் செய்துகொண்டும் இருக்கிருேம். தீண்டாதார்களில் பெரும்பாலோர் விவசாயிகள்; உழைப்பாளிகள். இரவு பகல் என்ற பேதமின்றி நம் நிலபுலங்களில் நெற்றிவியர்வை நிலத்தில் விழ உழைக்கிருர்கள். பயிர்பச்சைகளைக் கட்டிக் காக்கிருர்கள். கடைசியில் அவர்களுடைய இரத்

த்தையே அந்நிலபுலங்களுக்கு தண்ணீராகவடித்து பயிரை வளர்த்து நெல்லாக்கி — அரிசியாக்கி நமக்க ளிக்கிறார்கள். நாம் சாப்பிடும் ஒவ்வொரு பருக்கைக் கும் வாயிருக்குமானால் அந்த ஏழைகளின் உழைப் பை — மகத்தான சேவையை — அவை ஒவ்வொன் றும் கதைகதையாகச் சொல்லும். அந்த ஏழைமக் கள் ஸ்டிரைக் செய்தால் உயர்ஜாதிக்காரன் என்று மார்தட்டிப் பூரித்துப் பெருமைகொள்ளும் ஒவ்வொரு வனும் பட்டினி கிடந்து சாகநேரிடும்.

தன்னலங்கருதாது இரவு பகலாக யந்திரம் போல்—பிசாசுபோல் —உடல்வருந்தி உழைத்திடும் அந்த ஏழைகளின் நிலை என்ன ?

ஐயோ, அந்த ஏழைமக்களை எண்ணுந்தோறும் இரத்தக் கண்ணீர் வருகிறது. ஊருக்கு வெளியிலே ஒரு ஒதுக்குப்புறத்திலே ஓட்டையும் உடைசலுமாய் மண்சுவரால் எழுப்பப்பட்டுள்ள குடிசைதான் அவர் கள் வாசஸ்தலம். நாள் பூராவும உழைத்தாலும் அவர்களுக்கு அரைவயிற்றுக் கஞ்சிக்கும்வழியில்லை. கஞ்சியும், கம்புக்கூழும், கேழ்வரகுக் களியுந்தான் அவர்கள் ஆகாரம். நண்டு, நத்தை, தவளை, மீன் முதலியன அவர்களுடைய உப ஆகாரங்கள். அவர் களில் அநேகருக்கு நல்ல உடைகூடக் கிடையாது. கந்தலும், கிழிசலும் நிறைந்த துணிதான் அவர்க ளுடைய உடை. அதை முழங்கால்வரை கட்டிக் கொள்கிறார்கள். மேலே போர்த்திக்கொள்ளக்கூட துணி இல்லை. இறைவனளித்த இரு கைகளையுமே போர்வையாகக்கொண்டு உடம்பைப் போர்த்துக் கொள்ளுகிறார்கள். மிகக் கடுமையான குளிர்காலங் களில் உலர்ந்த செத்தையால் நெருப்பு மூட்டி கணப்பு போட்டுக்கொள்கிறார்கள்.

ஆண்கள் நிலைதான் இப்படி என்றால் பெண்கள் நிலை இன்னும் படுமோசம். அவர்களிற் பெரும்பா

லோர்க்கு ஒரே புடைவைதான். மாற்றுடை கிடையாது. அந்த ஒரு புடைவையும் ஆயிரத்தெட்டு கந்தல். அதையும் முழங்கால் வரையில்தான் கட்டமுடியும். ரவிக்கை, ஜாக்கெட் இதெல்லாம் மூச்சுவிடக்கூடாது இப்பெயர்கள் அவர்கள் வாயில்கூட நுழையாது. அவர்களிற் பலர் இடுப்பில் மட்டும் இரண்டு முழ கந்தல் துணியையே போட்டு மானத்தைக் காத்துக் கொள்கிறார்கள். அவர்கள் கூந்தலோ எண்ணெய்காணது சிக்குப்பிடித்து சடைசடையாய் இருக்கிறது.

அந்தப் பஞ்சை மக்களின் நிலையை ஒரு கணம் உன்னிப்பார்த்தால் நெஞ்சம் பதறுகிறது. நாம் அவர்களுடைய உழைப்பைப் பயன்படுத்திக்கொள் கிறோம். உடலை வதக்குகிறோம். இரத்தத்தை அட்டைபோல் உறிஞ்சுகிறோம். ஆனால் அவர்கள் உழைப்பிற்குரிய கூலியைக் கொடுக்காமல் ஏமாற்றுகிறோம். சாதாரண மனிதனுக்குள்ள உரிமையைக் கூட அவர்களுக்குக் கொடுக்க மறுக்கிறோம். இந்தக் கொடுமையை — நயவஞ்சகத்தை — என்னவென்று சொல்வது? சமூகத்திலிருந்து இந்தப் "பாஸிஸப்" போக்கை ஒழிக்கவேண்டும்.

தாழ்த்தப்பட்டவர்கள் என்று நாம் அழைப்பவர்களில் இன்னொரு பகுதியார் தான் தோட்டிகள். ஜன சமூகத்திற்கு ஈடும் இணையுமற்ற சேவையைச் செய்யும் மற்றொரு சாரார் இவர்கள். இவர்கள் கட்டுப்பாடாக வேலைநிறுத்தம் செய்துவிட்டால்கக்கூஸ்கள் நாறிவிடும். காலரா உடனே பரவிவிடும். பட்டணமும் நாசமாகிவிடும்.

மற்றொரு பகுதியார் சக்கிலியர்கள். செத்த மாட்டை உடனே அப்புறப்படுத்தி நமக்கு உதவி புரிகிறார்கள். இவர்களுடைய அற்புதமான கைவண்ணம்தான் நமது பாதங்களுக்கு பாதரக்ஷையாயமைந்து பாதுகாப்பு அளிக்கிறது.

இத்தகைய சமூக ஊழியர்களைத்தான் நாம் இகழ்கிறோம். ஆலயத்தினுள் விட மறுக்கின்றோம். ஆனால் அவர்களுடைய உழைப்பையும் உண்மை ஊழியத்தையும் மட்டும் பயன்படுத்திக் கொள்ளத் தவறுவதில்லை.

அவர்களுடைய உண்மை ஊழியமும், விசுவாசமும் இல்லாவிட்டால் நாம் க்ஷணநேரங்கூட வாழ முடியாது.

"வாழாவிட்டாற் போகிறது. செத்துத்தான் போகிறோமே" என்று யாராவது வீம்புக்காகச் சொல்லலாம். அப்படி செத்துப்போனாலுங்கூட தீண்டாதார்களுடைய உதவிதான்வேண்டும். குழிபறிக்கவும் கொட்டுமேளம் முழக்கவும், ஊர்கள்தோறும் இழவு லிகிதத்தை ஏந்திச்சென்று செய்தி அறிவிக்கவும் இவர்கள் உதவியை நாடியாக வேண்டும்.

உயர் ஜாதிக்காரர்கள் ஆலோசிக்கவேண்டும். அந்த ஏழைமக்கள் மனதுவைத்தால் மகத்தான புரட்சியை-மகத்தான புதுமையை செய்துவிடமுடியும். அவர்கள் தங்களை உயர்வகுப்பார் ஆலயத்தினுள் அனுமதிக்காததற்காக இந்தச் சேவைகளை செய்வதில்லை என்று தீர்மானித்துவிட்டால் உயர் ஜாதியினரின் பிணங்கள் நாறிவிடும். கொட்டுமேளத்தை அவர்கள்தான் முழக்கவேண்டும். அங்கிலைக்கு உயர்ஜாதிக்காரர்கள் வரக்கூடாதென்று விரும்பினால் வெள்ளம் வருவதற்கு முன் அணைபோட வேண்டும்.

காலப்போக்கின் மாறுதலால் சமூகப் புரட்சி வலுத்து இன்று தீண்டாதார் உள்ள இழிநிலையில் வைராக்கிய வைதீகக் கோஷ்டியார் வந்தால் அப்போதவர்கள் மனது எப்படியிருக்கும் என்பதைச் சில நிமிஷங்கள் சிந்தித்தால் தீண்டாதார்களுக்கு எவ்வளவு கொடிய தீமையை விளைவித்துவிட்டோம் என்பதை அவர்களே உணர்வர்.

# 4. சண்டிப்போக்கு

## —நொண்டிக் காரணங்கள்.

“உழைப்பினுலும், தொழிலினுலும் ஒரு மனிதன் உயர்ந்தவனுகவோ, தாழ்ந்தவனுகவோ ஆகிவிட முடியாது” என்பது அறிஞர்கள் ஏகோபித்துக்கூறும் முடிவு. இம்முடிவை நாம் ஏற்றுக்கொள்ளத் தான் வேண்டும். அப்படியானல் தாழ்த்தப்பட்ட வகுப்பினரை உடனே ஆலயத்தினுள் அனுமதிக்க வேண்டியதும், அதற்காகத்தன்னலான முயற்சியை உடனே செய்யவேண்டியதும் உயர்ஜாதிக்காரர்கள் ஒவ்வொருவரின் கடமையாகும்.

அவர்கள் செத்தமாட்டைத் தின்கிருர்களாம் நாகரீகம் இல்லாதவர்களாம். சாஸ்திரம் வேறு அவர்களைத் தீண்டாதே, ஆலயத்தினுள் விடாதே என்று சொல்கிறதாம். இப்படியெல்லாம் காரணங்களைக் கற்பிக்கிருர்கள் நமது உயர்ஜாதிக்காரர்கள் என்போர்.

அவர்கள் ஏன் செத்தமாட்டைத் தின்கிருர்கள்? தவறு யாருடையது? யோசித்துப்பார்த்தால் தவறு உயர்ஜாதிக் காரர்களுடையதே என்பது நன்கு விளங்கும். அவர்களை அந்த நிலைக்கு ஆளாக்கிவிட்டோம் நாம். அத்தகைய பட்டினிக் கொடுமையில் வாட்டி வதக்கி ஆழ்த்திவிட்டோம். இந்நிலைக்கு யார் பொறுப்பு?

அவர்கள் மாடுகளைத் தின்கிறார்கள் என்று குறைகூறும் இவர்களிற் பலர் ஆடுகளைத் தின்கிறார்கள்; கோழியைத் தின்கிறார்கள்; கொக்கைத் தின்கிறார்கள்; மீனைத் தின்கிறார்கள்; பன்றியைக்கூடத் தின்கிறார்கள். மாட்டுக்கும் ஆட்டுக்கும் இவைகளுக்கும் என்ன வித்தியாசம்? இறைவனது சிருஷ்டியில் அனைத்தும் ஒரே ஜீவன்கள்தான். இவைகளிற் பலவற்றையோ ஏதேனும் ஒன்றையோ தின்பவர்கள் ஆலயத்தினுள் அனுமதிக்கப்படும்போது, தாழ்த்தப்பட்டவர்கள் மட்டும் ஏன் போகக்கூடாது?

அவர்களிடையே நாகரீகம் இல்லை என்று சொல்லுகிறார்கள். எப்படி அவர்களிடையே நாகரீகம் வளரமுடியும்? நாம் அவர்களை ஒதுக்கிவைத்து விட்டோம். சமூகத்தில், உரிமையில், உடைமையில் எல்லாவற்றிலும் அவர்களை அப்புறப்படுத்தி வைத்தது போதாதென்று, வசிக்கும் இடத்திலும் கூட அவர்களை ஒதுக்கிவைத்து விட்டோம். ஊருக்கு வெளியே ஒரு பர்லாங்குக்கு மேற்பட்ட தூரம்தள்ளி அவர்களை வசிக்கச்செய்திருக்கிறோம். அந்த இடத்திற்கு "பறைச்சேரி" என்று பெயர்கொடுத்துள்ளோம்.

பொதுவாக தாழ்த்தப்பட்டவர்கள் ஏழைகள். அன்றாடக் கூலியைக் கொண்டு பிழைப்பவர்கள். அநேக நாட்கள் அரைவயிற்றுக் கஞ்சிதான் அவர்கள் ஆகாரம். சோற்றுக்கே 'லாட்டரி'போடும் நிலையில் பட்டுச்சொக்காயும் பளபளக்கும் வெள்ளைவேஷ்டியும், சலவை ஷர்ட்டும், ஆடம்பர ஆபரணங்களும் அவர்களால் அணிய முடியுமா?

முதலில் நாம் அவர்களுக்கு ஆலயப்பிரவேச உரிமையை வழங்கவேண்டும். அவர்களைச் சமதர்ம

நோக்கத்தோடு நடத்தவேண்டும். அவர்களை நம்மிடையே வாழ அனுமதிக்கவேண்டும். அவர்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவேண்டும். உழைப்புக்குத்தக்க ஊதியத்தை நல்கவேண்டும். இப்படியெல்லாம் செய்தால் அவர்களிடையே நாகரீகம் தானாகவே உண்டாகும்.

சமீபத்தில் தமிழ்நாட்டின் தேசியத்தலைவர் ஒருவர் ஒரு அற்புதமான யோசனையைக் கூறினார். தாழ்த்தப்பட்டவர்களை உயர்ஜாதி ஹிந்துக்களுடன் வசிக்க அனுமதிக்கவேண்டும். ஒரு ஊர், ஒரு தெரு என்றிருந்தால் அதில் ஆரம்பத்திலிருந்து பார்த்தால் முதலில் ஒரு தாழ்த்தப்பட்டவர் வீடு, அடுத்தாற்போல் ஒரு உயர்ஜாதியினர்வீடு, அதற்கு அடுத்தாற்போல் ஒரு தாழ்த்தப்பட்டவர்வீடு, அடுத்தபடியாக உயர்ஜாதியினர்வீடு. இப்படி மாறிமாறி இருக்கவேண்டும். உயர்ஜாதியினர் மத்தியில் தாழ்ந்தவகுப்பினரை இப்படி வசிக்கச்செய்தால் உயர்ஜாதியினர் போல் அவர்களும் கல்வி, சுகாதாரம், அறிவு, நாகரீகம் முதலிய எல்லாவற்றையும் பெறுவர். உயர்ஜாதியினரும் அவர்களை ஏற்றுக்கொள்ளத் தக்க சகிப்புத்தன்மை பெறுவர் என்று கூறினர்.

ஆம். நல்லயோசனை! அந்த நாள் வந்தால், தாழ்ந்தோர், என்று நாம் இன்று இழித்துக்கூறும் அவர்கள் கல்வி, கேள்வி நாகரீம் எல்லாவற்றிலும் உயர்ந்து ஒவ்வொருவனும் ஒரு கலைஞனகவும், ஸர். சி. வி. இராமனகவும், கவி தாகூராகவும் விளங்க முடியும். தாழ்த்தப்பட்ட பெண்மணிகள் ஒவ்வொருவரும், நாகரீக மணிகளாக, அழகுத் தெய்வங்களாக

சினிமா ஸ்டார்களைப்போல் சுடர்விட்டுத் திகழ முடியும்.

எனவே தீண்டாதார்கள் இன்றிருக்கும் இகழ் நிலைக்கும், அநாகரீகத்திற்கும், சுகாதாரமின்மைக்கும் நாம்தான் — உயர்ஜாதியினர் தான் காரணம் என்று நான் குற்றஞ்சாட்டுகிறேன். அதை மறுக்க முடியாது.

தீண்டாதார்களைப் பாழ்நிலையில் அமிழ்த்தும் இன்னொரு பயங்கர ராக்ஷஸன் மதுவரக்கன். மது அரக்கன் ஒழிந்தால் அதனல் பெரும் பயனடையும் சமூகத்தார் தீண்டாதார்கள் தான். இதையுணர்ந்தே தீண்டாமை விலக்கில் வெகு அக்கரையாகப் பாடு பட்டுவரும் காங்கிரஸ் மந்திரிசபை 8 ஜில்லாக்களில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவந்துள்ளது சீக்கிரமே மாகாணம் பூராவும் மதுவிலக்கு அமுலுக்குவரும். அந்தநாளில் ஹரிஜனங்களின் வாழ்க்கைத்தரம், நாகரீகப், கல்வி, அறிவு அனைத்தும் உயரும் என்பது உறுதி.

எட்டுகோடி மக்களுக்கு நாம் மனிதஉரிமைகளை மறுப்பதன் பலனுக நாளுக்குநாள் நமதுஹிந்துமதம் நசித்துக் கொண்டு வருகிறது. இந்து மதத்தைச் சேர்ந்த தீண்டாதார்கள் தங்களை அன்போடு அரவணைத்துக் கொள்ளும் இஸ்லாம் மதத்தையும், கிறிஸ்துவ மதத்தையும் சார்ந்துவிடுகிருர்கள். இஸ்லாம் மதமும் கிறிஸ்துவ மதமும் அவர்களைத் தீண்டாதவர்களாகநடத்தவில்லை. தங்கள் உரிமைகளையெல்லாம் அவர்ளுக்கு அளித்து அவர்களோடு சரிசமத்துவ

பங்காளித்துவம் கொண்டாடுகிறது. இந்து மதம் போல் அவர்களுக்கு ஆலயப்பிரவேச உரிமை மறுக்கப்படுவதில்லை. அவர்கள் அந்த மதத்தைச் சார்ந்த தக்ஷணமே 'சர்ச்சுக்கோ' 'கோரிக்கோ' தாராளமாக அனுமதிக்கப் படுகிறார்கள் ஆண்டவனை ஆனந்தமாக வணங்குகிறார்கள். அதனால் அவர்கள் கோவில்கள் கறைபட்டுவிட்டதாக அவர்கள் சொல்லக்காணோம்; மனதாற்கூட நினைப்பதாகத் தெரியவில்லை.

இன்னொரு பெருங்கொடுமையும் நம் சகோதரர்கள் தீண்டாதார்களுக்குச் செய்து வருகிறார்கள். பிற மதத்தினரான இஸ்லாமிய கிறிஸ்துவர்களை அனுமதிக்கும் நம் உயர்ஜாதியினரின் ஹோட்டல்கள் நம் ஹரிஜனங்களை மட்டும் அனுமதிக்க மறுக்கின்றன. இது எவ்வளவு படுமோசம்!.

---

"ஏழையென்றும் அடிமையென்றும்
எவனுமில்லை, ஜாதியில்
இழிவுகொண்ட மனிதரென்ப
திந்தியாவில் இல்லையே;
வாழி கல்வி செல்வ மெய்தி
மனமகிழ்ந்து கூடியே
மனிதர் யாரு மொருநிகர்
ஸமானமாக வாழ்வோமே.

— பாரதியார்

# 5. ஆலயங்களில்

## —லீலா விநோதங்கள்.

"தீண்டாதவர்களை ஆலயத்தினுள் அனுமதித்தால் ஆண்டவன் அதனால் சினங்கொண்டு எங்கோ ஓடிப் போய்விடுவார்" என்று சொல்லுகிறார்கள்; அவர்களை ஆலயத்தினுள்விட ஆக்ஷேபணை செய்யும் வைதீகக் கோஷ்டியார்.

இவ்வளவு ஆக்ஷேபணைகளைக்கிளப்பும் அன்பர்கள் இன்றைய ஆலயங்கள் புராணங்களிற்சொல்லப் பட்ட இலக்கணத்தோடு இருக்கின்றனவா என்பதை யோசித்தார்களா? ஆண்டவனுக்குப் பயந்து, பக்தியோடு பூசிக்கப்பட்டு, அவனருள் பெற பக்தர்களுக்கு உகந்த முறையில் அவை நடைபெறுகின்றனவா என ஆராய்ந்து பார்த்தால் அவ்வளவும் மோசம்! ஆபாசம்! அபத்தம்!

ஒரு முறை உலகமகா புருஷன் மகாத்மா காந்தியடிகள் காசிவிசுவநாதர் ஆலயத்திற்கு விஜயம்செய்தபோது அங்கே ஆண்டவனருகே வரிசையாக நிறுத்தப்பட்டு, நாகரீக மணிகளாய் விளங்கிய தேவதாசிகளைப் பார்த்ததும் "இதென்ன **கோவிலா, அல்லது நடனசாலையா?**" என்று கேட்டாராம்; தன்னைக் கோவிலுக்கு அழைத்துவந்தவர்களை நோக்கி.

சமீபகாலம் வரையில் பெரிய தேவஸ்தானங்களுக்கு கௌரவ தர்மகர்த்தாக்கள் நியமிக்கப்பட்டு

வந்தனர். (இன்னும்கூட சில கோவில்களில் இம் முறை அனுஷ்டிக்கப்படுவதாகத் தெரிகிறது.) இது ஒரு கௌரவ உத்தியோகம். ஊதியம் கிடையாது. ஜன சமூகத்துக்கு ஊழியம்செய்யவோ, பொதுஜன நன்மைக்கான காரியங்களைச்செய்து, ஆத்ம திருப்தி பெறவோ அதில் இடமில்லை. அப்படிப்பட்ட பதவிக்கு நியமனம் நடைபெறும் காலத்தில் எதேஷ்டமான போட்டியிருக்கும். இதன் காரணம் என்ன? இதன் உள்ளடக்கத்தை அற்புதமாக ஆணித்தரமாக வெளியிட்டார் அந்தக் காலத்தில் ஒரு தமிழ் நாட்டுப் பிரசங்கி.

"**தேவதாசிகளின் மோகலாகிரியில் விழ்ந்து, தர்மகர்த்தா பதவியை அடைவதன் மூலம் அத்தேவதாசிகளைத் தங்களுக்கே சொந்தமாககிக் கொண்டு ஏகபோகமாக ஆண்டனுபவிக்க மதம் பிடித்த பணக்காரர்கள் ஒருவரோடொருவர் மோதிக்கொள்ளும் ஒரு காக்ஷியே அது!**" என்று வர்ணித்தார். அது அவ்வளவும் உண்மை. அன்றும் இன்றும் பொருந்தக்கூடிய பேச்சு.

இப்படிப்பட்ட நல்லெண்ணக்காரர்களின் காப்பில்தான் ஆண்டவனின் பரிசுத்தம் காக்கப்படுகிறது! உயர்ஜாதிக்காரர்களின் ஒப்பற்ற தலைவர்களாகிய இவர்கள்தான் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஆலயத்தினுள் பிரவேசிக்கக் கூடாது என்று வீராவேசத்தோடு கிளம்புகிறவர்கள்!

"கோவில்பூனை தேவர்க்கு அஞ்சாது" என்ற பழமொழியைச் சமயம்பார்த்து பிறப்பித்த அந்தப் பெரியோனுக்கு ரேஷன் கார்டில்லாமல் ஒரு அரை வீசை சர்க்கரையாவது கொடுக்கவேண்டும்! அப்ப

டிப் படம்பிடித்தாற்போல் ஆலய ஒழுக்கங்களை அம்பலப்படுத்திவிட்டார் ஆசாமி. கோவில் பூசனையில் ஈடுபட்டுள்ள பூசகர்கள் தெய்வத்திற்கு பயந்தா நடக்கிறார்கள்?

இறைவன் நாமாவாளியைப் பாடுங்கால் "....நற் கருப்பஞ்சாற்றினிலே, தேன்கலந்து, பால் கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து. ஊன்கலந்து, உயிர் கலந்து உவட்டாமல் இனிப்ப.." தாகக்கருதி இனிக்க இனிக்கவா அந்த முழுமுதற்கடவுளின் நாமாவளியைப் பாடுகிறார்கள்? ஏதோ ஆரம்பவகுப்பு பையன் குருட்டுப்போக்காக வாய்ப்பாட்டை நெட்டுருபோட்டு ஒப்புவிப்பது போல், கடமைக்கு அழுகிறார்கள். சமயத்தில் வெற்றிலைப்பாக்கு போட்டு குதப்பும் அவசரத்தில் தங்கள் விரலிலுள்ள சுண்ணாம்பைச்சுவாமியின் முகத்திலேயும் பூசிவிடுகிறார்கள். இப்படிப்பட்ட பக்தர்களெல்லாம் சுவாமியின் 'பாடிகார்டாக' இருக்கும்போது உண்மை பக்தியில் ஆழ்ந்து, இறைவனிடம் அசைக்கமுடியாத நம்பிக்கையும் இடையறாத அன்பும் பணிவும் பயமும்கொண்ட ஏழைத் தீண்டாதார்கள் அவனைச் சமீபித்து தரிசித்து அவனை ஏத்தி அவன் புகழ்பாடி ஆனந்திப்பதால் அந்த இறைவன் ஓடிவிடுவானா?

கௌரவ டிரஸ்டிகள் இருந்த காலத்திலும் சரி, ஊதியம் பெறும் நிர்வாகிகள் நிர்வாகம் நடத்தும் காலத்திலும் சரி கோவில்களில் நடந்த — நடக்கும் அட்டூழியங்கள் கொஞ்சமா? ஆயிரம் ரூபாய் செலவு செய்து உற்சவம் நடத்திவிட்டு, ஐயாயிரத்துக்கு கணக்கைக்காட்டி நாலாயிரத்தை 'சுவாஹா' செய்து கொள்ளையடிக்கும் 'புருஷ்வாக்களை' விரல் விட்டு எண்ண முடியுமா?

தாங்கமுடியாத இந்த அட்டூழியங்களை எல்லாம் பொறுத்துக்கொண்டு அவர்களுக்கு எவ்வித இன்ன

லேயும் கொடுக்காத கடவுள், தன் படைப்பிலே, தன் குழந்தைகளிலே 'உயர்வு - தாழ்வு' என்ற பேதா பேதத்தை கற்பித்து அச்சாரார் தன்னிடம் வந்தால் 'ஆகா பொறுக்கமாட்டேன்' என்று சொல்லுவரா? பெற்ற தாயினும் கனிந்தூட்டும் அம்மையப்பன் தன் கண்களிலேஒன்றுக்கு வெண்ணெயையும் மற்றொன்றுக்கு சுண்ணும்பையும் தடவுவாஞ?

அபாரமான முடிச்சவிழ்ப்பு வேலைகளுக்கு நிலைக்களனாக உள்ளதுகோவில் காதலும்-காமமும, காதல் கடிதங்களும், காமக்கூத்துகளும - கன்னியர் வேட்டையும் சர்வ சாதாரணமாக நடமாடும் இடம் இன்றைய ஆலயங்கள். சமூகத்தின் முதல் நெம்பர் பாபிகளான - பாதகர்களான - பாஷாண்டிகளான இவர்களைப் பூமிதேவியும் தாங்குவது விந்தையே! கடவுள் கண்ணெதிரிலேயே எந்தக் கடவுள் அத்தகைய தீச்செயல்களுக்காகத் தண்டிப்பார் என்று கூறப்படுகிறதோ - அக்கடவுள்களின் எதிரிலேயே கொஞ்சமும் அஞ்சாமல் அதே பாபங்களைச் செய்கிறார்கள். இத்தகைய இழிவாளர்களுக்கெல்லாம் தன் பரந்த இடத்திலே இடங்கொடுத்து பவ்யமாக ரக்ஷிக்கும் அந்தப் பரந்தாமன் ஏழைப் பஞ்சமனை மட்டும் ஏற்றுக்கொள்ளமாட்டேன் என்று மறுப்பானு?

உயர் ஜாதிக்காரன் கொலையாளியாயிருந்தாலும், பைசாவுக்குப்பைசா வட்டிவாங்கும் பாதகனுயிருந்தாலும், மூடிவைத்துக் கழுத்தறுக்கும் மூர்க்கனுயிருந்தாலும், கோர்ட்டேறி பொய்சாக்ஷி சொல்லி பிழைப்பவனுயிருந்தாலும் ஆலயத்தினுள் பிரவேசிக்கலாம்; ஆண்டவனைப் பூஜிக்கலாம்; தேவதாசி என்ற போர்வையிலே உயர்ஜாதி விபசாரி ஆண்டவனுக்கு அஞ்சலி செய்யலாம். ஆனல் வாயில்லாப் பிராணிகளான, தரித்திர நாராயணர்களான, கோவணாண்டிகளான அந்த ஏழைத் தாழ்த்தப்பட்டோர்மட்டும் கதிமோக்ஷமின்றி தள்ளப்படுகிறார்கள்.

# 6. சாஸ்திரம்

## —பேசுகிறது!

தீண்டாதார்களை ஆலயத்தில் விடக்கூடாது என்று சாஸ்திரம் சொல்கிறதா? இல்லவே இல்லை.

இன்ன ஜாதியாரால் இன்னின்ன கோவில்கள் கட்டப்பட்டன என்பதற்கு எந்த சாஸ்திரத்திலும் ருஜு இல்லை. ஆலயங்கள் அமைக்கவேண்டும். என்ற எண்ணம் நமது மூதாதையர் மனதில் தோன்றி அவர்கள் அவ்வாறு நிர்மாணிக்க முயன்ற காலத்தில் இந்தியாவின் பழங்குடி மக்களும், உண்மை உழைப்பாளிகளுமான தீண்டாதார்களின் பங்கும் அதில் கண்டிப்பாக இருந்தே இருக்கவேண்டும். பெரிய கற்றூண்களைத் தூக்கி நிறுத்துவது; கல், மரம், மட்டை முதலியவைகளைச் சுமந்து வருவது, சித்து, கொத்துவேலைகள் செய்வது. இதிலெல்லாம் அவர்கள் ஈடுபட்டே இருக்கவேண்டும். அப்படி அவர்களால் - அவர்கள் உழைப்பினல், அவர்கள் கையினல் எழுப்பப்பட்டுள்ள கோவில்களில் மூல புருஷர்களாகிய அவர்களுக்கே அனுமதி மறுப்பா? விந்தை!

அவர்கள் கோவிலைக் கட்டலாம். கோபுரத்தை நிர்மாணிக்க உதவலாம். அதனலெல்லாம் கடவுள் ஓடிவிடமாட்டார். தீண்டாதார்களாகிய அவர்களால் தீண்டப்பட்ட கற்சுவர்களுக்கிடையில் உட்கார்ந்திருக்க அக்கடவுள்களுக்கு சம்மதம். ஆனல் அவர்களின் வாடைமட்டும் காற்றிலே மிதந்துவந்து கூட

தன்மேற் படக்கூடாது என்று அக்கடவுள் கூறு வாரா? தெய்வத்தைப் பைத்தியமாக்குகிறார்கள் சநாதனவாதிகள்.

ஆராய்ச்சியாளர்கள் இன்னொரு விஷயத்தையும் கண்டு பிடித்திருக்கிறார்கள். தென்னிந்தியக் கோவில்கள் பல தாழ்ந்த வகுப்பினராலேயே நிர்மாணிக்கப்பட்டனவாம். ஆனால் காலம் செல்லச்செல்ல உயர்ந்த ஜாதியினர்கள் அவற்றைத் தங்கள் வசப் படுத்திக்கொண்டனராம்.

சரித்திரத்தைப் புரட்டிப்பார்த்தால் நமது ஆலயங்கள் பலவற்றை முடியுடை மூவேந்தர்களே நிர்மாணித்ததாகக் காணப்படுகிறது. அம்முடி வுடை மூவேந்தர்கள் தங்கள் ஆளுகைக்கு உட்பட்ட எல்லோரிடமும் வரிவசூல் செய்தே வந்தார்கள். அவ்வாறு வரிவசூல் செய்யும்போது தீண்டாதார்களைமட்டும் விலக்கிவிட்டதாகக் கூற ஏதும் ஆதாரம் இல்லை. எனவே அக்கோவில்களில் தாழ்ந்த ஜாதியினரின் பணமும் பங்கும் சேர்ந்திருக்கிறது. எனவே உயர்ந்த ஜாதியான் என்று மார்தட்டிப்பேசும் ஒருவனுக்கு அந்த ஆலயத்திலுள்ள உரிமை எள்ளளவும் குறையாமல் தாழ்த்தப்பட்ட சகோதரர்களுக்கும் இருக்கிறது. இதை மறுக்க எவர்க்கும் நியாயமான உரிமை கிடையாது.

சைவ புராணத்திலே தீண்டப்படாதனாகிய நந்தனுக்கு நடராஜப் பெருமான் அருள் கொடுத்தார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. விஷ்ணு புராணத்திலே தீண்டப்படாத திருப்பா

ளூழ்வானை திருவரங்கம் இரங்கநாதர் தன்னேடு அணைத்து இரண்டறச் சேர்த்துக்கொண்டாரென்று கூறப்படுகிறது இந்த நாளில் நந்தன் வழியிலும் வந்த மக்கள் கோபுரத்துக்குப் புறம்பே நிறுத்தப் படுகிருர்கள்.

சில விதண்டா வாதிகள் கேட்கலாம், தீண்டா தார் நந்தன் மாதிரி தீக்குளித்து வரட்டுமே என்று; நந்தன் சரித்திரத்தின் பிற்பகுதி அறிவுக்குப் பொருந்தத் தக்கதாயில்லை. சரித்திரத்தின் உண் மையை மறைக்க வைதீகக் கோஷ்டியார் சேர்த்து வைத்த இடைச்செருகல்தான் அது என்பது ஆய்ந் துபார்த்தால் நன்கு விளங்கும்.

**"காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்! அகண்டாகார**
**சிவ-போகமெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித்**
**ததும்பிப் பூர்ணமாய் ஏக உருவாய்க் கிடக்குதையோ**
**இன்புற்றிட நாமினிதெடுத்ததேகம்விழுமுன்புசிப்பதற்கு**
**சேரவாரும் ஜெகத்தீரே!"**—என்று கதறிக்கனிந்து அழைக்கிருர் தாயுமான சுவாமிகள்.

அவர் அப்படி அழைக்கும்போது ஆதிதிராவி டர்கள் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனல் இப்படி நடந்தால் என்ன நேர்கிறது? அந்த ஏழை யின் முதுகு பிய்ந்து போய்விடும். இதுவா தாயுமா னவர் சொன்னதின் கருத்து.

இன்னும் பார்ப்போம், விஷ்ணு மதாச்சாரியா ரான இராமானுஜர் என்ன செய்தார்? ஒரு சமயம் மக்கள் கடைத்தேறும் மார்க்கம் என்ன என்பது பற்றி அவருடைய குரு உபதேசித்தார். அந்த ரகசி யத்தை யாரிடமும் சொல்லக் கூடாதென்றும் எச்ச ரித்திருந்தார். பரமசாதுவாக விளங்கிய இராமாநு ஜர் உடனே கோயில் கோபுரத்தில் ஏறி நின்று

கொண்டு ஊரையே கூட்டிவைத்துக்கொண்டு அந்த அற்புத இரகசியத்தை எல்லோருமறியச்சொன்னார். பின்னர் இரங்கிவந்து 'தீண்டாச் சகோதரர்களே! யான்பெறும் பேறு நீங்களும் பெறுங்கள்' என்று கூறி அவர்களையும் ஆலயத்தினுள் அழைத்துச் சென்று மகிழ்ந்தார்.

நமது பிரசித்திபெற்ற இதிகாசங்கள் **இராமாயணமும் பாரதமும்** ஆகும். இராமன் மகாவிஷ்ணுவின் அவதாரம் என்று சொல்லப்படுகிறது. அந்த இராமாயணத்திலிருந்தே ஆதாரம் எடுப்போம்.

இராமன் வேடுவனாகிய குகனோடு அளவளாவினான். அவன் அளித்த தினையையும், தேனையும் அருந்தினான். அவனை தன்னுடைய ஒப்பிலாத உத்தம தம்பி என்று கொண்டாடினான். சபரி என்ற கிழவி எச்சில்செய்து எடுத்து வைத்திருந்த பழங்களையெல்லாம் உண்டான்.

இராமாயண காலத்தைவிட்டு பாரத காலத்துக்கு வருவோம். மகாபாரதத்தின் கடைசிக்கட்டம் தர்மராஜன் சொர்க்கலோகத்தை நோக்கிப்போய்க் கொண்டிருக்கிறான். அவனைப் பின்தொடர்ந்தது ஒரு சொறிநாய். தர்மன் மேலே மேலே அதற்கும் மேலே போனான். நாயும் பின்தொடர்ந்தது ஸ்வர்க்கத்தின் வாயிலை அடைந்தான். நாயும் அவன் பின்னங்கால்களை அடுத்து நின்றது. ஸ்வர்க்காதிபதி சொன்னான்: "தர்மா ஸ்வர்க்கத்தில் உனக்குத்தான் இடம் உண்டு; உன் பின்னாலிருக்கும் அந்த நாயை அனுமதிக்க முடியாது, அதை விரட்டித்தள்ளு வெளியே" என்றான். தர்மன் அதற்கு மறுத்துவிட்டான். அந்த நாயையும் அனுமதிக்கவேண்டும். இல்லாவிட்டால் அப்படிப்பட்ட ஸ்வர்க்கம் தனக்கு வேண்டாம் என்று சொல்லிவிட்டான்.

ஒரு சொறிநாய்க்காக ஸ்வர்க்கத்தையே தியாகம் செய்ய தயாராயிருந்த தர்மராஜன் காலத்திலே தீண்டாமை இருந்திருக்க முடியுமா?

கந்தபுராண காலத்திற்கு வருவோம். வள்ளி, குறத்தி. குறவர் — குறத்தி இவர்களைத் தீண்டாதார்களாகவே சமூகம் மதித்துவருகிறது. அப்படிப்பட்ட தீண்டாத ஜாதியைச் சேர்ந்த குறத்தி வள்ளியை வேலும் - மயிலுமுடைய பெருமான் பெண்டாட்டியாகவே ஏற்றுக்கொண்டானென்றால், தீண்டாதாரைக்கண்டு தெய்வம் வெறுக்கிறது என்று கூறுவது அறிவுக்கு ஒட்டிய விஷயமாகுமா?

சிவபெருமான், கண்ணப்பனென்ற வேடுவதீண்டாதான், தன் பற்களால் கடித்து சுவைத்து ருசி பார்த்து அர்ப்பணித்த மாமிசாதி ஆகாரங்களை ஏற்றுக்கொண்டு அவனுக்குத் தரிசனம் அளித்தார். இதெல்லாம் எதை நிரூபிக்கின்றன? இறைவனுக்கு எம்மதமும் சம்மதம். உண்மை அன்பு ஒன்றே அவனுக்குத் தேவை என்பதைத்தான் தெரிவிக்கின்றது.

இந்த வரலாறுகளை எல்லாம் முழுக்கமுழுக்கப் படித்து மனப்பாடம் செய்து வேதபாராயணம் பண்ணி மகிழும் வைதீகர்கள், செய்கையில்மட்டும் "படிப்பது இராமாயணம இடிப்பது பெருமாள் கோவில்" என்ற பாணியில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆலயப் பிரவேசம் அனுமதிக்க மறுக்கிறார்கள்.

---

எந்தக் குலத்தில் பிறந்தாலும்—அவர்
எந்த நிலையிலிருந்தாலும்
இந்து நிலத்தில் பிறந்தவரெல்லோரும்
இந்திய தேவியின் மக்களடி.

# 7. தீண்டாமை

## -அந்தஸ்துக்கா? மனிதனுக்கா?

அநேக வருஷங்களுக்கு முன்னல் நடந்த சம்பவம் ஒன்று, புகைபடலத்தின் மத்தியில் தோன்றுவதுபோல் ஞாபகத்திற்கு வருகிறது. அந்தக் காலத்தில் ஒரு கவர்னர் தென்னட்டின் பிரசித்திபெற்ற கோவிலொன்றுக்கு பூட்ஸ் காலுடன் விஜயம் செய்தார். அவர் பார்வைக்காக மூர்த்திகள் தங்களைவிதம் விதமாக அலங்கரித்துக்கொண்டு அவர்முன் தோன்றின. கவர்னர் மூர்த்திகளைச்சமீபித்து அவைகளின் ஆபரணங்களைத் தொட்டுப் பார்வையிட்டாராம். அகமகிழ்ந்தாராம்.

வெள்ளைக்காரர்கள் மாட்டுமாமிசத்தை முழுக்க முழுக்க சாப்பிடுகிறவர்கள். நமது நாகரீகத்தையும் கலாசாரத்தையும் கண்டு, கிண்டல்செய்து நகைப்பவர்கள். அந்த கவர்னர் மட்டும் அதற்கு விலக்கல்ல.

நம்தீண்டாத சகோதரர்கள், வைதீகர்கள் சுமத்தும் 'பெரும் குற்றமாகிய' மாட்டு மாமிசத்தைப்புசிப்பவர்கள்; அதனல் ஆலயத்தை விட்டுத்தள்ளப்படுவதாகச் சொல்லப்படுகிறவர்கள்.

ஆனல், ஒரே குற்றத்தைச் செய்யும் இருவரில் ஒருவராகிய வெள்ளைத்தோல் துரைக்கு 'ப்ரீ

லைசன்ஸ்' கொடுத்து கோவில் நுழைவு உரிமையும் பூரணகும்ப வரவேற்பும் அளிப்பது. அதே தவறைச் செய்யும் இன்னொருவரை ஆலயத்துக்கு அரைமைல் தூரம் ஒதுங்கி ஓடு என்று கர்ஜிப்பது நேர்மையாகுமா? இஃதொன்றே தீண்டாமை, மோசடி, சூது என்பதை எடுத்துக்காட்டவில்லையா?

"தீண்டாதவன்! தீண்டாதவன்!!" என ஓட ஓட விரட்டுகிறார்கள். அதே ஆதித்திராவிட கருப்பன் மதம்மாறி ஜான் டேவிட்டாகி பெரிய உத்தியோகம் பெற்று வரும்போது மண்டிப் போடுகிறார்கள். கை குலுக்குகிறார்கள். தங்கள் வீட்டு சமயலறை வரையில் அழைத்துப் போகிறார்கள். அப்போது இத் தீண்டாமை எங்கேயோ போயே போய்விடுகிறது.

---

ஆலயமாகிய ஒரே பூமியில் இந்தியர் அனைவரும் ஒன்றாக வசிக்கவேண்டும் என்று இறைவன் பணித்திருக்கிறான். ஆகவே, மனிதர்களால் சிருஷ்டிக்கப்பட்ட வேற்றுமையைப் பாராட்டாது உங்கள் ஆலயங்களை ஹரிஜனங்களுக்குத் திறந்து விடுங்கள். பின்பு, உங்கள் ஹிருதயத்தையும் பணப்பையையும் திறந்து ஹரிஜனங்களுக்கு கல்வி ஊட்டுங்கள்.

—இந்தூரில் ராஜாஜி

மனிதன் தன்னுடைய அக்கிரமங்களும், தான் பிறரைச்செல்லும்படி தூண்டும் அக்கிரமங்களுக்கும் சமயசாஸ்திரங்களிலிருந்து ஆதாரம் தேடப் புறப்படுவானானால் மதங்களும் மத நூல்களும் ஏற்படாமல் இருந்திருக்கக்கூடாதா என்ற எண்ணம் உண்டாகிறது.

—'தமிழ் ஹரிஜன்'

# 8. காந்திஜீ

## —ஹரிஜனங்களின் ரக்ஷகர்.

பிரிட்டிஷ் சர்க்காரின் ஏறக்குறைய 200 வருட ஆட்சியிலே தீண்டாதார்கள் எந்த விதமான முன்னேற்றமும் பெறவில்லை. மகாத்மா காந்தி அரசியலில் கலந்த பிறகு தீண்டாமையை போக்குவதில் கவனம் செலுத்தினர். மனிதருள் ஒரு சாராருக்கு மற்றொரு பெரும் பகுதியினர் இழைத்துவரும் கொடுமையைக் கண்டு வேதனையடைந்தார்.

தேசத்தில் ஒரு கூட்டத்தினரை 'தீண்டாதார்' என ஒதுக்கி வைப்பதை நான் சகிக்க மாட்டேன். நல்ல மரத்தில் புல்லுருவி புறப்படுவதைப்போல் இந்தத்தீண்டாமை இருக்கிறது. ரொம்பகாலமாக வம்ச பரம்பரையாக, இப்படி ஒரு கூட்டத்தை விலக்கி வைப்பது இருந்து வருகின்றது மனிதநியாயத்துக்கும் தயாள சிந்தைக்கும் அனுதாப இதயத்திற்கும் அன்பு மதத்திற்கும் விரோதமானது இத்தீண்டாமை. தூய்மையான ஹிந்து மதத்தில் தீண்டாமை என்னும் மாசு இருக்கும் வரையில் ஹிந்து மதத்திற்கு அவமானந்தான்'' என்று முதன் முதல் உறுதியாகக் கூறினர். இதைப்போக்க நடைமுறையில் நடவடிக்கைகள் எடுக்க ஆரம்பித்தார்.

"தீண்டாமையை ஒழிக்க வேண்டும்'' என்ற கிளர்ச்சியை இந்த நாட்டிலே முதன்முதலாக ஸ்தா

பித்தது காங்கிரசும் காந்தியடிகளுந்தான். மகாத்மா காந்தியின் நிர்மாணத்திட்டத்தில் முக்கிய ஸ்தானம் பெற்று விளங்குவது தீண்டாமை ஒழிப்பும், ஹரிஜன முன்னேற்றமுந்தான்.

காந்திஜீயின் முயற்சியினல் தீண்டாதார்களின் நிலை உயர்ந்தது. 'ஆதித்திராவிடர்கள்' 'தாழ்த்தப்பட்டவர்கள்' என்று அழைக்கப்பட்ட அவர்களுக்கு 'ஹரிஜனங்கள்' என்ற அழகான பெயரைச் சூட்டினர் மகாத்மா. அவர்கள் முன்னேற்றத்துக்காக இன்றளவும் 'ஹரிஜன நிதி' திரட்டி ஆங்காங்குள்ள ஹரிஜன சேவா சங்கங்கள் மூலம் ஹரிஜனங்களின் கல்விக்கு—முன்னேற்றத்துக்கு—அதை செலவிட ஏற்பாடு செய்திருக்கிருர். அவருடைய இடையருத முயற்சியினல்தான் ஹரிஜனங்கள் தங்கள் படுபாதாளமான தாழ்நிலையிலிருந்து இன்று ஓரளவாவது உயர்ந்திருக்கிருர்கள் என்பதை மறக்க முடியாது.

ஹரிஜனங்களின் உண்மைத்தோழன்-உண்மை ஊழியன்-மகாத்மா காந்தி உயர்ஜாதி தாழ்ந்தஜாதி என்ற பாகுபாட்டை ஒழிக்க அவர் எவ்வளவு தூரத்திற்குத் துணிந்திருந்தார் என்பதற்கு அவருடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள் தக்கசான்று ஆகும்.

தென்னுப்பிரிக்காவில் மகாத்மா காந்தி வக்கீல் தொழில்புரிந்த காலம். மகாத்மா காந்தியின்வீட்டில் கழிவுநீர் வேளியேபோவதற்கு வழியில்லை. சிறுநீர் கழிப்பதற்கு ஒவ்வொரு அறையிலும் ஒரு பானை இருந்தது. அதைக் காந்திஜியோ அவருடைய மனைவியோ அலம்புவது வழக்கம். அதற்காக அவர்

கள் தோட்டியையோ கூலிகளையோ எற்படுத்திக் கொள்ளவில்லை. அவர்களுடன் நன்கு பழகிய குமாஸ்தாக்கள் தாங்கள் தங்கள் அறையிலிருக்கும் பானையைத் தாங்களே கழுவிவிடுவது வழக்கம்.

ஒருமுறை ஒரு புது குமாஸ்தா காந்திஜீயிடம் வந்து சேர்ந்தார். அவர் ஹரிஜனர். அவருக்கு காந்தி வீட்டு விஷயம் தெரியாது. ஆகையால் அவருடைய அறையிலிருந்த கழிவுநீர்ப்பானையை அவர் கழுவவில்லை. அதைக் காந்தி தம்பதிகளே அலம்ப வேண்டி நேர்ந்தது. காந்திஜியின் மனைவியார்மற்ற அறையிலிருந்த குடங்களையெல்லாம் அலம்பினர். ஹரிஜன குமாஸ்தா அறையிலிருந்த குடத்தை மட்டும் அலம்பவில்லை; அலம்ப முடியாதென்றும் காந்தியிடம் கூறிவிட்டார்.

'இந்தமாதிரி அபத்தத்தையெல்லாம் என்னல் சகித்துக்கொண்டிருக்க முடியாது' என்று இரைந்தார் காந்தி. அவருக்கு ஆத்திரம் உண்டாயிற்று. கஸ்தூரிபாயின் கைகளைப் பிடித்து கரகரவென்று இழுத்துகொண்டுபோய் வெளியே தள்ளுவதற்காகக் கதவை திறக்க முயன்ருர்...........'

அந்த அளவுக்கு மகாத்மாவை இழுத்துச்சென்றது எது? தீண்டாமை ஒழிய வேண்டும் என்பதிலிருந்த வேகம், ஹரிஜனங்களிடம் அவருக்குஇருந்த ஹிருதய பூர்வமான அன்பு இவைகளேயாகும்.

ஆமதாபாத்திலே, ஒரு ஹரிஜன குடும்பத்தைத் தன்னுடைய ஆசிரமத்திலே சேர்த்துகொண்டார் காந்தி. அந்தக்காலத்திலே 'தீண்டாமை' மேல்ஜாதி

ஹிந்துக்களிடம் இன்னும் வலுப்பட்டிருந்த காலம். அச்சம்பவத்தினல் தனக்கு நேர்ந்த சிரமத்தை வர்ணிக்கிறார் காந்தி.

"தூதர்பாயும் அவருடைய மனைவியும் எங்கள் ஆசிரமத்தில் வசித்தனர். உதவி செய்யும் நண்பர்கள் சமூகத்தில் இதனல் கலவரம் உண்டாயிற்று. பங்களாவின் சொந்தக்காரருடைய பகுதியில் இருந்த கிணற்றிலிருந்து தண்ணீர் எடுப்பது சங்கடமாகிவிட்டது. கவலை இறைப்பவனுக்குக்கூட எங்கள் தண்ணீர் மேலே தெறித்தால் தீட்டுவந்துவிடும். அவன் எங்களைத் திட்ட ஆரம்பித்தான். தூதாபாயையும் அவன் தொந்தரவு படுத்தினன்..... ஹரிஜனை ஆசிரமத்தில் சேர்த்துக் கொண்டதால் பண உதவி கிடைப்பது நின்றுபோயிற்று, எங்களை சாதியிலிருந்து தள்ளிவிட்ட வதந்தி என் காதில் விழுந்தது. "நம்மைச் சாதியை விட்டுத் தள்ளினலும் சரி. பண உதவி கிடைக்காமற் போனலும் சரி. நாம் அந்த உறுதியைவிட்டு நகரக்கூடாது. தீண்டாதார்கள் சேரியின் மத்தியிலேயே போய் வசிப்போம். அங்கே கிடைப்பதைக்கொண்டோ, ஏதாவது தொழில்செய்து சம்பாதித்தோ சமாளித்துக் கொள்வோம்" என்று நண்பர்களிடம் கூறி திடமாகத் தீர்மானித்து வைத்திருந்தேன்!'

'சத்திய சோதனையில்' இவ்வாறு ஹரிஜனங்களுக்காக தான் ஏற்றுக்கொண்ட தியாகத்தை எழுதியிருக்கிறார் காந்தி.

x x x

'லக்ஷ்மி' என்ற ஹரிஜனப்பெண்ணைத் தன் குழந்தைபோல் வளர்த்து வந்தார் காந்தி. இன்றும் டெல்லி முதலிய இடங்களுக்கு போனல் 'ஹரிஜன காலனியில்' தான் தங்குகிறார்.

ஹரிஜனங்களுக்காக மகாத்மா சாகும் வரையில் உண்ணுவிரதம் என்ற மகத்தான தியாகத்தையும் மேற்கொண்டார்.

இரண்டாவது வட்டமேஜை மகாநாடு நடந்து முறிந்துபோன சமயம் பிரிட்டிஷார் இந்தியாவுக்கு புதிய அரசியல் சீர் திருத்தத்தை வழங்கினர்கள். அதன் பிரகாரம் ஹிந்துக்களும் ஹரிஜனங்களும் சம்பந்தா சம்பந்தமில்லாமல் தனித்தனியே பிரிக்கப்பட்டவர்கள். ஹரிஜனங்களுக்கு தனித்தொகுதி வழங்கப்பட்டது. இம்முறை அமுலுக்கு வந்திருந்தால் முடிச்சு இன்னும் இருகிப் போயிருக்கும். ஹரிஜனங்கள் வசிக்கும் இடத்தில்கூட ஒதுக்கப்பட்டிருப்பதுபோல அரசியலிலும் ஒதுக்கப்பட்டிருந்திருப்பார்கள். அவர்கள் என்றும் தீண்டாதர்களாகவே, என்றும் ஆலயத்தில் அனுமதிக்க மறுக்கப்படுபவர்களாகவே இருந்திருப்பார்கள். இந்த ஆபத்தை மகாத்மா உணர்ந்தார். எனவே, "ஹரிஜனங்கள் உயர்ஜாதி ஹிந்துக்களுடன் சமத்துவமாகப் பழகிவாழும சந்தர்ப்பத்தை அளிக்கக்கூடிய கூட்டுத்தொகுதியே வேண்டும். அவர்கள் ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்கள். ஹிந்து மதத்திலிருந்து அவர்களைப் பிரிக்கக்கூடாது. இந்த உரிமைகள் அவர்களுக்குக் கிடைத்தாகவேண்டும். இல்லாவிட்டால் சாகும்வரையில் உண்ணுவிரதம்'' என்று ஆரம்பித்தார்.

மகாத்மாவின் கோரிக்கையை பிரிட்டிஷார் ஏற்றுக்கொண்டனர். அதன் பயனுக ஏற்பட்டதுதான் **பூனு ஒப்பந்தம்.** ஹரிஜனங்களுக்குக் கூட்டுத்தொகுதி அளிக்கப்பட்டது. தனித்தொகுதியின் மூலம் அவர்களுக்குக் கிடைத்த ஸ்தானங்களைவிட, இதனுல்

அதிக ஸ்தானங்கள் அவர்களுக்குக் கிடைத்தன அவர்கள் ஜனத்தொகை விகிதாச்சாரத்திற்கு மேலேயே அந்த ஸ்தானங்கள் வாங்கித்தரப்பட்டன.

இன்று சென்னை சட்டசபையில் உயர்ஜாதி ஹிந்துக்களின் மிகப்பெரும்பான்மையான ஓட்டுகளைப்பெற்று ஒரு ஹரிஜனர் சபாநாயகராக வர முடிந்தது என்றால் அதற்கு மகாத்மாவின் இந்த ஒப்பற்ற சேவையும், அவர் வாங்கிக்கொடுத்த இந்தப் பொதுத்தொகுதி முறையுந்தான் காரணம் என்பதை விசுவாசமுள்ள ஒவ்வொரு ஹரிஜனும் உணர வேண்டும்.

ஹரிஜனங்களின் உயர்நிலைக்காக அளப்பரிய சேவைசெய்து வருகிறார் மகாத்மா. தன்னுடைய சொந்தப் பத்திரிகைக்கு "ஹரிஜன்" என்ற பெயரையே வைத்திருக்கிறார் தன் பிரசங்கங்களிலெல்லாம் தீண்டாமைக்கு சாவுமணியடிக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார். ஹரிஜனங்களுடன் நன்கு பழகுகிறார். மற்றவர்களையும் பழகவேண்டும் என்கிறார். "படித்தவர்களெல்லாம் ஹரிஜனப் பெண்களையே மணந்துகொள்வது என்ற வைராக்கியம் செய்துகொள்ளவேண்டும். அப்படிச்செய்தால் தீண்டாமை இந்நாட்டைவிட்டு ஓடிவிடும்" என்று படித்த இளைஞர்களை வேண்டிக்கொள்கிறார்.

காங்கிரஸ் மகாசபையும், ஹரிஜன சேவா சங்கமும் தீண்டாத ஹரிஜன சகோதரர்களுக்குப் பல விதத்திலும் சேவைசெய்து வருகின்றன. ஹரிஜன சேவா சங்கத்தின் சார்பாக அநேக இடங்களில் ஹரிஜன மாணவர்களுக்கு இலவச ஹாஸ்டல்கள்

திறக்கப்பட்டிருக்கின்றன. சென்னை காங்கிரஸ் மந்திரிசபை ஹரிஜன முன்னேற்றத்திற்காக ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறது.

இன்று ஹரிஜனங்களை ஆலயத்தினுள் அனும திக்கவேண்டும் என்ற பெருங்கிளர்ச்சியைக் கிளப்பி அதற்கான பொதுஜன ஆதரவு முதலாய ஏற்பாடு களைச் செய்துவருவோர் குறிப்பாக காங்கிரஸ்காரர் கள்தான். ஹரிஜன வாலிபர்கள் காங்கிரசுக்கு பக்க பலமாயிருந்து, அவர்கள் முயற்சியில் தோளோடு தோளாக நின்று உதவவேண்டும். எவ்வளவுக்கெவ் வளவு அவர்கள் ஆதரவு அதிகரிக்கிறதோ அவ்வள வுக்கவ்வளவு மகத்தான சேவையைக் காங்கிரஸ் செய்யமுடியும்.

# திறவுங்கள்!

— கோவிலை.

இந்தியாவின் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய புனித ஆண்டு 1946 ஆகும். இந்த ஆண்டில்தான் இந்தியாவின் தலைநகரமாகிய டெல்லியில் நமது மாபெரும் தலைவர்கள் இடைக்கால சர்க்காரை அமைத்தார்கள். "தென்னுப்பிரிக்க சர்க்கார் தென்னுப்ரிக்காவில் இந்தியர்களை நடத்தும்முறை நேர்மையற்றது. நீதியற்றது. பழைய ஒப்பந்தங்களை அனுசரித்ததாக இல்லை" என்ற இந்தியாவின் கண்டனத்தீர்மானம் நேசதேச அசெம்பிளியில் மிகப் பெருப்பான்மையான ஓட்டுகளால் நிறைவேறியது.

இந்தியாவைச் சுற்றி அநேக நாடுகள் சூழ்ந்திருக்கின்றன. இடைக்கால சர்க்கார் அமைக்கப்பட்டதுமுதல் அவை இந்தியாவைக் கூரிய திருஷ்டியுடன் கவனித்துவருகின்றன. இந்த நிலையிலே மற்றெந்த நாட்டிலும் இல்லாத கொடுமை, மனிதனை மனிதனுக நடத்த மறுக்கும் கொடுமை, மற்றெல்லா மனிதனுக்கும் உள்ள உரிமை, உயர்வு முதலிய இவைகள் ஒரு சாராருக்கு மட்டும் மறுக்கப்படுவது சரியா? இந்தியாவின் வளர்ச்சிக்கு, பாரத தேசத்தின் பண்பாட்டுக்கு, உலகோர் முன்னிலையில் உயரிய அரசியலமைப்பும் பரிபூரண சுதந்தரத்தையும் பெற இருக்கும் இப்பொற்புடைய நாட்டிற்கு இக்

களங்கம் நல்லதல்ல. எந்த நாட்டிலும் இல்லாத புதுமை இது!

மேல்நாட்டிலே நிறத்துவேஷம் தீண்டாமையை விட கொடூரமாகத் தலைவிரித்தாடுகிறது என்றாலும் அவர்கள் தங்களுடன் பிறந்த ஒரு பெருஞ் சமூகத்தாரை அப்படி நடத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பிரித்தாளும் சூழ்ச்சியிலே பேர்போனவன் ஆங்கிலேயன். அவன் தன்னுடைய சூழ்ச்சிக்கு உறுதுணையாக முஸ்லீமையும் முஸ்லீம் லீக்கையும் தற்போது உபயோகித்துக்கொண்டு வருகிறான். அநேகமாக அடுத்தபடியாக அவன் அணுகுவது தீண்டாத வகுப்பினராயிருக்கலாம். உயர்ஜாதி ஹிந்துக்கள் என்போர் இதை உணர வேண்டும். உஷாராயிருக்கவேண்டும். இப்போதே தீண்டாமையை அடியோடுவிலக்கி அவர்களை ஆலயத்தில் அனுமதிக்க மறுத்தால் வெள்ளைக்காரனுக்கு "கனகுஷியாய்ப்" போய்விடும். அவன் அழுத்தமாக இங்கே உட்கார்ந்துகொள்ள திட்டம் போட்டுவிடுவான். எனவே இப்போதிருந்தே விழிப்புடனிருக்க வேண்டும்.

இத்தேசத்தின் உண்மை வீரர்களாகிய காங்கிரஸ்காரர்களின் முயற்சியினால் ராஜாஜீ மந்திரிசபை இருந்த காலத்தில் மதுரை, பழநிபோன்ற ஆலயங்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டன. அந்த இடங்களிலெல்லாம் ஹரிஜனங்கள் பிரவேசித்து ஆனந்தத் தாண்டவமாடி ஆண்டவனைத் தரிசித்து மகிழ்ந்தார்கள். மகாத்மா காந்தியடிகள் தன்னுடைய தென்னாட்டு விஜயத்தின்போது ஹரிஜனங்களை அனுமதித்த புனித ஸ்தலங்களாகிய இந்த இரு ஆலயங்களுக்கும் விஜயம்செய்து அக மகிழ்ந்தார்.

தற்போதைய மந்திரிசபை காலத்திலும் திருச்செந்தூர், எட்டையாபுரம், திருவொற்றியூர், திருப்பரங்குன்றம், திருவாரூர், சங்கரன்கோவில், குன்றக்

குடி, பிரான்மலை, முதலிய கோவில்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்பட்டுள்ளன. தென்னாட்டிலுள்ள எல்லா கோவில்களையும் விட கீர்த்தியிலும், மூர்த்தியிலும் வருமானத்திலும் உயர்ந்த திருப்பதி வெங்கடாஜலபதி ஆலயத்திலுள்ளும் ஆலயப்பிரவேசம் நடைபெறப் போகின்றது.

மக்கள் மனது வைத்தால் மாபெரும் காரியங்களைச் சாதிக்க முடியும். ஆங்காங்குள்ள மக்களின் அபிமானத்தின் மீதும் ஏகோபித்த ஆதரவின் மீதுமே ஹரிஜனங்களை ஆலயத்தில் பிரவேசிக்க அனுமதியளிப்பது என்பது சர்க்காரின் கொள்கையாக இருக்கிறது இச்சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

தமிழ் நாட்டின் அதிர்ஷ்டம். தமிழர்களின் நற்றவப்பயன், இப்போது மிகப்பெருப்பாலோர் மனதில் 'தீண்டாமை வெறுக்கத்தக்க ஒரு மாசு'. அதை அடியோடு அகற்றவேண்டும்' என்ற தீவிர எண்ணம் தோன்றியுள்ளது. ஆங்காங்குள்ள காங்கிரஸ் கமிட்டிகள் இதில் தீவிரமாக வேலைசெய்து வருகின்றன.

ஹரிஜன ஆலயப் பிரவேசத்தில் சர்க்காரின் சட்டமும் சுலபமான முறையில் திருத்தப்படுமென்று தெரிகிறது. எனவே எல்லோரும் ஒன்றுபடுங்கள். ஊர்கள் தோறும், தெருக்கள் தோறும், வீடுவீடாக "**இந்நாட்டின் 8 கோடி மக்களுக்கு கோவிலைத் திறவுங்கள்! உடனே திறவுங்கள்!! இப்பொழுதே திறவுங்கள்!!!**" என்று வானமுட்ட கோஷம் போடுங்கள் கிளர்ச்சி செய்யுங்கள் உங்கள் கிளர்ச்சியின் எதிரொலி கோவில்களைத் திறந்துவிடும். நம்மைப் பிடித்த பீடைநீங்கும். நமது நாட்டின் சுதந்திரம் இன்னும், காற்றிலும் கடு வேகமாக விரைந்துவரும்.

**தீண்டாமை ஒழிக!**

# சான்ருேர் புகல்வது.



ஐயோ! இந்நாட்டிலுள்ள ஏழைமக்களைப் பற்றிநினைப்பார் யாருமிலர். அவர்கள்நாட்டுக்கு முதுகெலும்பு போன்றவர்கள். இந்த ஏழைக்ளிஞலேயே உணவுஉண்டாகிறது. சக்கிலியரும், கூலிக்காரருமாகிய இந்த ஏழைகளுக்கு இரங்குபவர் யாருமிலர். இந்துக்களுடைய் அனுதாபம் இல்லாமையால் ஆயிரக்கணக்கான பறையர்கள் கிறிஸ்துவர்களாகின்ருர்கள். இது பசிக் கொடுமையிஞல்மட்டும் ஏற்பட்டதல்ல; நமதுள்ளத்தில் அனுதாப மின்மையால் ஏற்பட்டது. நாம் இரவும் பகலும் "எங்களைத் தீண்டாதீர்க்ள்; எங்களைத் தொடாதீர்கள்" என்று கூவிக் கொண்டிருக்கிருேம். இந்த நாட்டிலே இரக்கமில்லையா? அன்பில்லையா? தீண்டாமை முதலிய வழக்கங்களை உதைத்துத்தள்ளுங்கள்.

"வறியவர்களே, துன்புற்றவர்களே, கவலையால் நொந்தவர்களே, தாழ்த்தப்பட்டவர்களே, எல்லோரும் வாருங்க்ள்" என்றுகூறி அனைவரையும் ஒன்றுகூட்ட வேண்டும். இத்தகையோர் விழித்தெழுந்தாலன்றி பாரதமாதா நித்திரையினின்று எழமாட்டாள்.

அவர்களிடத்தும் எல்லாப் பிராணிகளிடத்தும் ஒரே பிரம்மமே வியாபித் திருக்கிறதென்பதைப் பட்டப்பகல்போல் காண்கிறேன.

—விவேகாநந்தர்

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந்தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போமல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் யாம்வணங்கும் கடவுளாரே.

—அப்பர்

  

சாதிகுலப் பிறப்பென்னுஞ் சுழிபட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலவுதில்லைக் கண்டேனே.

—மாணிக்கவாசகர்

  

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் பசியினா லிளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
வெற்றரைக் கண்டு உளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோரென் நேருறக் கண்
டுளந்துடித்தேன்
ஈடின் மானிகளாய் ஏழைகளாய் நெஞ்சிளைத்
தவர் தமைக் கண்டே யிளைத்தேன்.

—வள்ளலார்

எமது மூன்றாவது வெளியீடு.

அலிகளுக்கும் ஆண்மையை உண்டாக்கும்

★ ★ ★ புத்தகம்! ★ ★ ★

# சுதந்திர தீபம்





"கலைமலர்" ஆசிரியர்

★ கலைப்பித்தன் ★

பேனாவிலிருந்து

உதிர்ந்த வீரம் செறிந்த எழுத்துக்கள்!

அழகழகான கருத்துக்கள்! அற்புத நடை!

புத்தக உலகிலேயே ஓர் புதுமை!

விபரங்களுக்கு

தியாகக்கொடி பதிப்பகம், துறையூர் திருச்சி ஜில்லா.

PRINTED AT THE SRI NATARAJA PRESS, TURAIYUR P. I. C. Ty. 46.